இருந்தாலும், அந்தப் பகுதியில் அதைவிட மோசமான தண்ணீர் இருக்கிற காரணத்தால், அந்த விதியைத் தளர்த்தலாம் என்ற யோசனை அரசாங்கத்திற்கு இருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : பர்மிஷன் இல்லாமல் செய்ததற்கு தடைகள் போடுவதானல் சரி, இந்த உத்தரவுகள் வருவதற்கு முன்னல், கட்டப்பட்ட தொட்டிகளுக்கு இப்பொழுது விதிவிலக்கு கொடுக்கலாம் என்பதை சர்க்கார் கவனிக்க முடியுமா? வீணுக ரூ. 10,000 வரை செலவு செய்தது வெறுமனே கிடக்கிறது. அங்கு நல்ல தண்ணீரும் இல்லாததால் அதை உபயோகிக்க அனுமதி கொடுக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : விதிகளைத் தளர்த்துவதாக உத்தேசம் என்றுதான் சொன்னேன். இந்தத் தண்ணீர் நல்லதாக இல்லாவிட்டாலும், அங்கு இருக்கும் குளம், குட்டைகளிலுள்ள தண்ணீர் மோசமானதாக இருப்பதால், இந்தத் தண்ணீரே மேல் என்ற வகையில், விதியைத் தளர்த்தலாம் என்று உத்தேசம்.

*No confidence motion on the Panchayat Board Presidents*

* 315- (உ) *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1958-ம் ஆண்டு பஞ்சாயத்து சட்டப்படி 1960-ல் எத்தனை பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் மீது நம்பிக்கை இல்லாத தீர்மானங்கள் நிறைவேறின?

(ஆ) எத்தனை அங்கீகரிக்கப்பட்டன? எப்போது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) In 1960, no-confidence motions were passed under the Madras Panchayats Act, 1958, against the Presidents of Orathur, Thenampadugai Panchayats in the Thanjavur district and Melpallipattu, Alagusanai and Sayanavaram Panchayats in the North Arcot district.

(*b*) The matter is under examination.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த பஞ்சாயத்துச் சட்டம் எப்பொழுது அமுலுக்கு வந்தது? இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானங்கள் எப்பொழுது நிறைவேற்றப்பட்டன? அதற்கு உண்டான விதிகள் சரியாக இல்லாததால்தான் இப்படி வந்தது என்பது உண்மையா? அப்படியானல், அதை ஏன் சர்க்கார் உடனடியாகச் சரி செய்யவில்லை?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே ஒரு சின்ன சட்டச் சிக்கல் இருக்கிறது. 1950-ம் ஆண்டு ஆக்ட் பிரகாரம், "நோ-கான்பிடென்ஸ் மோஷன்" போட இடமில்லை; 1958-ம் ஆண்டு ஆக்ட் படி அப்படி இடம் இருக்கிறது. 1950-ம் ஆண்டு சட்டப் பிரகாரம் எலெக்ஷன் நடந்திருந்தால், அந்த பிரசிடென்ட் மேல் இந்த "நோ-கான்பிடென்ஸ் மோஷன்" கொண்டுவரலாமா

19th August 1960]

என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. அது சம்மந்தமான முடிவு, சட்ட நிபுணர்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு கூடிய சீக்கிரத்தில் எடுக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : அப்படிப்பட்ட முடிவு எடுக்க எவ்வளவு காலம் பிடிக்கும்? பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள், சில பிராந்தியங்களில் அக்டோபர் 2-ம் தேதி ஏற்பட இருப்பதால், அதற்குள்ளாக அந்த முடிவைச் சர்க்கார் எடுப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கூடிய சீக்கிரத்தில் முடிவு எடுக்க முயற்சி செய்யப்படும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சில பஞ்சாயத்துக்கள் நல்ல முறையில் நடை பெறுவதற்கு, அவற்றை இரண்டாகப் பிரித்தால், ஒவ்வொரு பஞ்சாயத்தும், நல்ல வருவாய் இருப்பதனால், நல்ல முறையில் இயங்க முடியும் என்று கேட்டிருப்பதால், அம்மாதிரிப் பஞ்சாயத்துக்களை இரண்டாகப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் முயற்சி எடுக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது அடுத்த கேள்வி சம்பந்தமானது.

MR. SPEAKER : இது பிரசிடெண்ட் மேல் "நோ-கான்பிடன்ஸ் மோஷன்" சம்பந்தமானது. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?

SRI A. GOVINDASAMY : இந்தக் கேள்வியின் பதிலில் கொடுக்கப்பட்ட பஞ்சாயத்துக்களுக்கு 1958-ம் வருஷ சட்டம் நிறைவேறிய பிறகு எலெக்ஷன் நடந்ததா என்று சொல்லுவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னிடம் இருக்கும் தகவல்படி, இவர்கள் 1950-ம் வருஷ சட்டப் பிரகாரம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

*Bifurcation of Panchayats*

*** 315-ஊ Q.**—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு மாவட்டத்தில் பஞ்சாயத்துக்களை பிரிக்க வேண்டுமென்று எத்தனை கிராமங்களிலிருந்து கோரிக்கைகள் வந்தன?

(ஆ) அவைகளின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்ன?

(இ) போளூர் தாலுகா தேப்பனந்தல், வெங்கட்டம் பாளையம் கிராமங்களிலிருந்து மகசர் வந்ததா?

(ஈ) அப்படியானால் அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?